உ. வி. நிலைய வெளியீடு—௪.

சுயமரியாதைச்

# சொன்மாலை.

ஆக்கியோன் :—

ப. சீவானந்தன்.

நாச்சியார்புரம்,

உண்மை விளக்க நிலையத்தாரால்

வெளியிடப்பட்டது.

சுக்கில௵ பங்குனி௴ ௧௫௨.

டயமண்ட் பிரஸ்,

காரைக்குடி.

விலை] 1930. [அணா ஒன்று.

இதே பதிப்பு ஆசிரியரில் இருக்கிறது
கவிதைக்கு.

# கருத்துரை.

அன்பர்களே!

சமூக ஊழல்களும், மதக்கொடுமைகளும், அரசியல்சூழ்ச்சிகளும் அறவே தொலைந்து, சமத்துவம், சகோதரத்துவம், சுதந்திரம் ஆகியவையடைந்து, நாடு முன்னேற்றத் துறையில் முன்னோக்கிச் சென்று உண்மை விடுதலை பெறுவான் வேண்டித் தொண்டொன்றே தொழிலாக் கொண்டுழைக்கும் என்போன்ற இளைஞர் சிலரால் நாச்சியார்புரத்தில் நிறுவப்பட்டிருக்கும் 'உண்மை விளக்க நிலையத்தின்' முதலாவது வெளியீடு இது. இளைஞராலேயே நாடு விடுதலை பெறுமென்பது பல அறிஞரின் கருத்தும் எமது தேற்றமுமாகும்.

இன்றையச் சிறுவர்சிறுமியரே வருநாள் இளைஞர். அவர்களின் கொள்கை, நோக்கங்களின் அளவே தாய்நாட்டின் விடுதலையளவுமாகும். "தொட்டிற் பழக்கம் சுடுகாடுமட்டும்". இதுகாலைச்சிறுவரும் சிறுமியரும், மூடப் பழக்கவழக்கங்களுக் காளாகிக் குருட்டு நம்பிக்கையில் புகுத்தப்பட்டு, தன்னறிவு, தன்னுணர்ச்சி, தன்முயற்சி, தன் மதிப்பு, தன்நம்பிக்கை இன்னபிற அரும்பெறல் தன்மைகள் அற்றாராய் அடிமைகளாயிலங்குகின்றார். இன்னோரால் நாடு விடுதலை பெறுவ தருமையென்பது வெள்ளிடைமலை. ஆகவே இப்பாழ் நிலைமை மாறி, தாய்மொழிப் பற்றும், தாய் நாட்டன்பும், சுயமரியாதை உணர்ச்சியும், சுதந்திர வேட்கையும் சிறுவர் சிறுமியர் பெற்றிட இச்சிறு நூல் தூண்டித் தொண்டாற்றுமென்றும் முழு நம்பிக்கையோடு இதனை வெளியிடலாயினோம். இச்சிறுபணியைத் தமிழகம் போற்றுதல்கடன்.

உண்மைவிளக்க நிலையம்,
நாச்சியார்புரம்,
சுக்கில மாசி ௨௫.

ப. சீவானந்தன்.

உ. வி. நிலைய வெளியீடு—க.

## சுயமரியாதைச்

# சொன்மாலை.

ஆக்கியோன் :—

ப. சீவானந்தன்.

நாச்சியார்புரம்,

உண்மை விளக்க நிலையத்தாரால்

வெளியிடப்பட்டது.

சுக்கில௵ பங்குனி௴ ௧௫௨.

டயமண்ட் பிரஸ்,
காரைக்குடி.

விலை] 1930. [அணா ஒன்று.

# சுயமரியாதைச் சொன்மாலை.

---

தன்மதிப்பென்றுந் தலைப்படவேண்டி
நன்மதிப்புண்மை நாம்விளக்குதுமே.

1 அனைத்துயி ரொன்றென் றறிவதுன் கடமை

2 ஆரியர் சூழ்ச்சியில் ஆழ்ந்துழலாதே

3 இருடிகண் முனிவர்க ளென்பவர் புரட்டர்

4 ஈசற்கீவதாய்க் காசழியாதே

5 உன்னுடலுத்தமன் உறையுளென் றேயுணர்

6 ஊராருழைப்பில் உடல் வளர்க்காதே

7 எல்லாரு மோர்குல மெனத் தேர்ந்திடுக

8 ஏமாற்றுவோர் நட் பேமாற்றிடுக

9 ஐயமேற்போர் அறவோரன்று

10 ஒழுக்கமிலாதோர் இழுக்குடையோரே

11 ஓவா துழைப்பின் மேவா ததில்லை

12 ஔவியமுடையோர் அழிவர் திண்ணம்

13 கல்வியேமடமையைக் கல்லுங் கருவி

14 காதல் மணத்தா லேதருமின்பம்

15 கிறிபேசுவதாற் குறி காண்ப தரிது

16 கீழ்மேல்கூறிப் பாழ் போகாதே

17 குரு முன்னேயும் அறிவடிமைப்படேல்

18 கூட்டுறவியக்கங் கூட்டுவதாக்கம்

19 கெட்டவர் நன்னிலை கிட்ட முயற்சி செய்

20 கேடு நினைப்பான் கேடு படைப்பான்

21 கைம்பெண் துயரைக் களைதல் வேண்டும்

22 கொடுங்கோல் வீழக் கடும்போர் புரிக

23 கோவில்குளங்கள் யாவர்க்கும் பொது

24 கௌரவ வாழ்வே கருதற்குரித்து

25 சத்திரஞ்சாவடி எத்துவாளிக்கே

26 சாதிமதங்கள் சூதகர் சூழ்ச்சி

27 சிலைவணக்கத்தாற் றலைப்படுந் தீமை

28 சீர்திருத்தஞ் செயச் சேர்துணி வுடைமை

29 சுதந்திரம் வேண்டின் சுயமரியாதை கொள்

30 சூத்திரரென்போர் கூத்தியர் மக்கள்

31 செத்தவர்க்களிப்பவர் பித்தரேயாவர்

32 சேர்ந்து வாழ்பவர் தேசமாள்வர்

33 சைவரென்பவர் வைவதில் நிபுணர்

34 சொர்க்கமு நரகமும் மக்களின் மயக்கே

35 சோதிடம் முயற்சியைச் சேதிக்கும் முறை

36 சௌரியம் பேணித் தன்னறிவில்வாழ்

37 தக்கவருறவே மிக்கவராக்கும்

38 தாசியர்வேணுமாய்ப் பேசுவர் கயவர்

39 திருநீற்றணிவால் தீவினை நீங்கா

40 தீண்டாமை யொழியத் தீவிரமாயுழை

41 துன்பத்தொடர்பே யின்பப் பாதை

42 தூக்கு மேடையினும் நோக்கங் கைவிடேல்

43 தெய்வங்கூறினோர் செய்தவை கொடுமை

44 தேசபத்தருளும் மோசக்காரர் பலர்

45 தையலர் விடுதலை வையக விடுதலை

46 தொழிலாளருலகத் தோழர்களாவர்

47 தோன்றிய புரட்சியிற் சேர்ந்தொழுகிடுக

48 நன்றதைக்காணில் அன்றதைக் கைக்கொள்

49 நாத்திகருண்மையை யேத்திய வீரர்

50 நிறத்திமிரொழிய அறப்போர் தொடங்கு

51 நீதியில் நிற்பது வேதிறன் கூட்டும்

52 நுண்ணூலாராய்ந் தெண்ணிய பெறுக

53 நூறாய்ப்பிரிந்து நாறாதிருக்க

54 நெட்டுயிர்ப்பாளின் கட்டுடல்தங்கும்

55 நேரம்பழிப்பவர் கூர்மதியற்றோர்

56 நைபவர்க்கென்றும் உய்வழிதேடு

57 நொண்டிகூன் முடவர்க் குண்டியளித்திடு

58 நோயாளர்க்குத் தாயாயுதவு

59 பண்டிதரறியார் பகுத்தறிவின்றிறம்

60 பாரதமிராமனால் ஆரியர்கோட்டை

61 பிறமதம்புகுத்தல் அறக்கொடியர் செயல்

62 பிரோயின் கட்குடி வேராற விலக்கு

63 புத்தம் புதியவை நித்தமுநாடு

64 பூமியைக்காத்தல் சேமத்தின்வழி

65 பெண்ணும்ஆணும் எண்ணில் நிகரே

66 பேயும்பிசாசும் மாயுந்திடத்தால்

67 பையத்திருத்திப் பயன்பெறலருமை

68 பொய்யும் புளுகுமே புராணக்கதைகள்

69 போலித்தனமிக் காலக்கூத்து

70 மந்திரமென்பது தந்திரப்பேச்சு

71 மானவாழ்க்கையே தானமக்குடைமை

72 மிதிப்பவரடியைத் துதிப்பவன் மடையன்

73 மீளான்சூதுக் காளாய்த்திரிவோன்

74 முத்திக்கூற்றுக ளத்தனையும்பொய்

75 மூடப்பழக்கங் கேடதைவிளைக்கும்

76 மெல்லியர்கல்விக் கல்லும் பகலுழை

77 மேதையரென்பவர் தாதைப்பெருக்குவர்

78 மைந்தர்தங் கல்வியைச் சந்ததம் பேணு

79 மொழிபோல் நடப்போர் வழிபற்றிடுக

80 மோனச்சாமிகளே நம் பகைவர்

81 மௌட்டியங் கொல்லத் தெவிட்டாதறஞ்செய்

82 யந்திரப்பயிற்சியில் முந்திடத்துணிக

83 யாகம்புரிவது போகப்பித்தே

84 யௌவனமுடையோர் செவ்வன முழைப்பர்

85 ராக்கதர்பார்ப்பார் நோக்கையெதிர்த்தோர்

86 லீலைகள்பேசினர் வேலையில் வீணர்

87 வருணாச்சிரமம் வைதீகமுங்கொல்

88 வாக்குரிமை பெற யார்க்கும் வகைகாண்

89 விதிவிதியென்கை மதியிலார்கூற்று

90 வீண்சடங்கொழித்த லாண்கடனறிக

91 வெறியர்போர்க்கே குறிப்பூச்சுதவும்

92 வேதியர்க்கீவது பாதகஞ் சேர்க்கும்

முற்றிற்று.



# ஓர் வேண்டுகோள்

—:o:—

தீண்டாமை, வறுமை, பிணி, அறியாமை, அடிமை, குருட்டுப்பழக்க வழக்கங்கள், கட்குடி ஆகியவற்றை ஒழிக்கவும், ஆதித்திராவிடரை முன்னேற்றவும், பெண்ணுரிமை பேணவும், நாச்சியார்புரத்தில் (இராமநாதபுரம் ஜில்லா) நிறுவப்பட்டிருக்கும் உண்மை விளக்க நிலையம் தீவிரமாக உழைத்துவருகின்றது.

நிலையத்தில் நடைபெற்றுவரும் குருகுலத்தில் தாய்மொழிப்பற்றும், தன்மதிப் புணர்ச்சியும், நாட்டன்பெழுச்சியும், உரிமை வேட்கையும் கைவரத்தக்கவகையில் மாணவர்களுக்குக் கல்வி புகட்டப்படுகின்றது.

நிலையத்தின் சார்பில், மருதங் குடியிலும், கம்பனூரிலும் இரண்டு ஆதித்திராவிடப் பள்ளிக்கூடங்களும் நடைபெற்று வருகின்றன.

குருகுல வளர்ச்சிக்காக அன்பர்களனைவரும் உதவிபுரியுமாறு வேண்டுகிறோம்.

"நிதி மிகுத்தவர் பொற்குவை தாரீர்
நிதி குறைந்தவர் காசுகள் தாரீர்
அதுவுமற்றவர் வாய்ச்சொல்லருளீர்
ஆண்மையாளர் உழைப்பினை நல்கீர்"

(பாரதியார்)

ப. சீவானந்தன்,
ஆ. சுப்பையா,
செயலாளர்.

நாச்சியார்புரம்
7—4—30.